


# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

தனி பிரதி-ரூ. 10/-

மலர் - 2 ஏப்ரல் - ஜீன் - 2018 இதழ் - 2

கலிலேயராகிய மனுஷரே, நீங்கள் ஏன் வானத்தை அண்ணாந்து பார்த்து நிற்கிறீர்கள்? உங்களிடத்தினின்று வானத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட இந்த இயேசுவானவர் எப்படி உங்கள் கண்களுககு முன்பாக வானத்துக்கு எழுந்தருளிப்போனாரோ, அப்படியே மறுபடியும் வருவார் என்றார்கள்.

( அப். 1:11)

# தொழுநோயாளிகளின் குழந்தைகள் இல்லம்

ஆந்திர மாநிலத்தில் இந்த இல்லம் 34 குழந்தைகளுடன் செயல்பட்டு வருகிறது. இவர்களின் பெற்றோர் தொழுநோயாளிகள் ஆனபடியினால் அவர்களால் வேலை செய்து இக்குழந்தைகளின் அடிப்படை தேவைகளான உணவு மற்றும் உடை போன்றவைகளை சந்திக்க இயலவில்லை. பள்ளிச் செல்லும் நாட்களில் மட்டும் இக்குழந்தைகளுக்கு பள்ளியில் மதிய உணவு வழங்கப்படுகிறது. ஆகவே இக்குழந்தைகள் காலையிலும் இரவிலும் உணவு கிடைக்காமல் பசியால் அல்லல் படுகின்றனர். இக்குழந்தைகளின் பரிதாப நிலையைக் கண்ட இக்கிராம மிஷனெரி மற்றும் சபையார் இக்குழந்தைகளுக்கு காலையிலும் இரவிலும் தங்களால் இயன்ற அளவு உணவு சமைத்து கொடுத்து உதவுகின்றனர். இருப்பினும் இந்த ஏழை சபையால் குழந்தைகளுக்கனா உணவு தேவைகளை தினமும் சந்திக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். இந்த ஏழை குழந்தைகளுக்காக உதவும் இந்த சபையுடன் இணைந்து நீங்களும் உதவலாம். இக்குழந்தைகளுக்காய் உங்கள் தனி, குழு, சபை மற்றும் குடும்ப ஜெபங்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு குழந்தைக்கான மாத உணவு தேவை ரூ. 500/–

இக்குழந்தைகளை சந்திக்க மற்றும் உதவ விரும்புபவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய எண்: 9443155120



## மிஷனரிகளுக்கு மருத்துவ உதவி செய்தல்



Address:-
Newhope Mission
75/33, Isaac Street,
Nagercoil - 629001

மிஷனரி பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்கள் தேவ ராஜ்யத்தின் மகிமையான பணியை செய்து வருகின்றனர். அவ்வாறு பணியாற்றும்போது மிஷனரிகள் சந்திக்கும் இன்னல்கள், இடர்பாடுகள் ஏராளம் ஏராளம். இத்தனை இடர்களுடன் சில மிஷனரிகள் உடல் ஆரோக்கியம் சார்ந்த பல்வேறு நோய் நொடிகளுக்கு ஆளாகின்றனர். அவ்வித நோய்கள் தாக்கும்போது சில மிஷனரிகள் உரிய சிகிட்சைக்கான நிதி வசதியின்றி தவித்து வருகின்றனர்.

இவ்வித இக்கட்டான வேளைகளில் மிஷனரிகளின் சிறந்த மருத்துவ சிகிட்சைக்கு புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. ஏழை மிஷனரிகள் மருத்துவ சிகிட்சைக்கு கருத்துடன் ஜெபிப்போம். உதவ முன்வருவோம்.

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ள: 9442935233

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 2 ஏப்ரல் -ஜுன் - 2018 இதழ் - 2


## உள்ளே . . .


*1. இயக்குநர் கடிதம் ............ 1*

*2. வேத ஆய்வு ................ 2*

*3. இளைஞர் பகுதி ............ 6*

*4. பெண்கள் பகுதி ............ 8*

*5. ஜெப குறிப்பு ................ 11*

*6. வேதாகம போட்டி ......... 11*

*7. இறை தூது ................ 12*

*8. மருத்துவ குறிப்பு .......... 16*



ஆசிரியர்

S. மோசஸ் ராஜ் – 7502071054

ஆசிரியர் குழு

C. பால் வென்னட் சிங் –94423155120

ஆ. ரவி குமார் – 9442935233

S. வசந்த நேசம் – 9789183072

D.V. பிபின் சஜீவ் – 9443018392

முகவரி :

**புது நம்பிக்கை**

75/33, ஐசக் தெரு,

நாகர்கோவில் – 629 001



தனி பிரதி. 10/–

ஆண்டு சந்தா. 100/–

ஆயுள் சந்தா. 2000/–

தனி சுற்றுக்கு மட்டும்


**இயக்குநர் மடல்!**

*கர்த்தருக்குள் அன்பானவர்களே!*

தேவாதி தேவனின் மட்டற்ற கிருபையால் நமது ஊழியங்கள் மென்மேலும் வளர்ந்து வருகிறது. நமது பத்திரிகையின் வேத வினா–விடை போட்டியில் கலந்து கொண்டவர்களுக்கு 15–01–2018 அன்று பரிசுகள் வழங்கப்பட்டது. நமது பொதுச்செயலாளர் அன்புக்குரிய **Rev.Dr. இன்பராஜ் ஜான்சன்** அவர்கள் கலந்து கொண்டு சிறப்பு செய்தி கொடுத்தார்கள். செய்தி அனைவருக்கும் ஆசீர்வாதமாக இருந்தமைக்காக தேவனுக்கு ஸ்தோத்திரம்.

ஆந்திர மாநிலத்தில் கட்டப்பட்டு வரும் சபைக்காக தொடர்ந்து ஜெபித்துக் கொள்ளுங்கள். தேவனுடைய கிருபையால் நமது மிஷனரி பணிகள் இந்தியாவின் பன்னிரண்டு மாநிலங்களில் வளர்ந்து வருகிறது. கர்த்தருக்கு சித்தமானால் வருகிற காலங்களில் மிஷனெரிகளுக்கு ஒரு சிறப்பு பயிற்சி கொடுப்பதற்காக ஜெபித்து வருகிறோம். இந்த பணிகளில் தேவனுடைய நாமம் மகிமைப்படும்படி ஜெபித்துக்கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறோம்.

தேவ ஆசீர்வாதம் உங்களோடிருப்பதாக!

தேவ கிருபையால்,

**சகோ. ஆ. ரவி குமார்**

# மகிமை தேவனின் படைப்பு

பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரியேக தேவனுக்கு, இன்றும் என்றும் உள்ள சதாகாலங்களிலும் மகிமை உண்டாவதாக. அவராலே உங்களுக்கு கிருபையும் சமாதானமும் உண்டாவதாக. நாம் கடந்த இதழிலே ''நித்திய ஜீவன்'' என்பதின் பொருளையும் விளக்கத்தையும் அறிந்து கொண்டோம். இந்த இதழிலே, பைபிளில் காணப்படும் தேவனுடைய சிருஷ்டிப்பின் (படைப்பின்) போதனையை குறித்து ஆராயவிருக்கிறோம்.

பைபிளின் முதல் புத்தகமாகிய ஆதியாகமத்தின் முதல் இரண்டு அதிகாரங்களிலே, திரியேக தேவன் வானத்தையும் பூமியையும் அவைகளில் காணப்படுகிறவைகளையும் சிருஷ்டித்ததைப் பற்றி விளக்குகிறது. இதில் மாற்றுக்கருத்துக்கு இடமேயில்லை. ஆனால் தேவன் இல்லை என்று சொல்லுகிறவர்கள் இதை நிராகரிக்கின்றனர். இப்பிரபஞ்சமானது பரிணாம வளர்ச்சியின் விளைவே என்றும் மனனிதன் குரங்கிலிருந்து வந்தான் என்றும் தவறாய் போதிக்கின்றனர். ஆனால் பைபிள் இவர்களை மதிகெட்டவர்கள் என்று கூறுகிறது. (சங்.14:1) இந்த துர் உபதேசம் கடந்த 150 ஆண்டுகளாக உலகமெங்கும் பரவி வருகிறது. பாடசாலைகளிலும் இவையே போதிக்கப்படுகின்றன. இதிலே துக்கமான செய்தி என்னவெனில் இன்று தங்களை கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக்கொள்ளுகிறவர்களில் சிலரும் இந்த துர்போதனையில் விழுந்து உலகத்தாரோடு இணைந்து ''தேவனுடைய சத்தியத்தை பொய்யாக மாற்றி சிருஷ்டிகரைத் தொழுது சேவியாமல் பரிணாம கொள்கையை சேவிக்கிறார்கள். (ரோமர் 1:25) ஆனபடியினாலே தேவனுடைய சிருஷ்டிப்பின் செயலைக் குறித்த தெளிவான அறிவு நமக்கு உண்டாயிருக்க வேண்டும்.

### 01. தேவனே எல்லாவற்றையும் சிருஷ்டித்தார்

பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரியேக தேவனைத் தவிர்த்த அனைத்துமே அவரால் சிருஷ்டிக்கப்பட்டவையே ஆகும். இதை பைபிள் முழுவதுமாய் பார்க்கிறோம்.

i) தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார். (சங்.33:26; யோனா 1:9; எரே. 32:17; வெளி.14:7)

ii) தேவன் வானத்திலும் பூமியிலும் காணப்படுகிற எல்லாவற்றையும் சிருஷ்டித்தார். (நெகேமியா 9:6; வெளி. 10:6; அப்.14:15)

iii) தேவன் வானத்தையும் பூமியையும் காலத்தின் துவக்கத்திலே சிருஷ்டித்தார். (ஆதி.1:1; எரேமியா 1:10)

iv) தேவன் வானத்தையும் பூமியையும் நம் கண்களால் பார்க்க முடியாத பொருட்களைக் கொண்டு சிருஷ்டித்தார். (எபிரேயர் 11:3)

v) தேவன் யாருடைய துணையுமின்றி எல்லாவற்றையும் சிருஷ்டித்தார். (ஏசாயா.44:24)

**02. படைப்பில் திரியேக தேவனின் (ஏலோகீம்) மூன்று நபர்களின் பங்கு**

| | |
|---|---|
| பிதாவாகிய தேவன் | – ஆதி.1:1; எபே. 3:9 |
| குமாரனாகிய தேவன் | – ஆதி.1:1; யோ. 1:3; கொலோ. 1:16 |
| பரிசுத்த ஆவியானவராகிய தேவன் | – ஆதி.1:1,2; யோபு 33:4; சங்.104:30 |

**03. படைப்பின் ஆறு நாட்கள்**

தேவன் வானத்தையும் பூமியையும் அதிலுள்ள எல்லாவற்றையும் ஆறு நாட்களிலே படைத்தார் என பைபிள் கூறுகிறது. (யாத்.20:8–11) இதிலே அந்த ஆறு நாட்களைக் குறித்து சிருஷ்டிப்பை நம்புகிறவர்களுக்குள்ளேயே கருத்து வித்தியாசங்கள் உண்டு. ஆனால் இதிலே தேவன் (24x6) அதாவது இருபத்து நான்கு மணி நேரம் கொண்ட ஆறு நாட்களிலே சகலத்தையும் சிருஷ்டித்தார் என்பதை நாம் விசுவாசிக்க வேண்டும். (யாத்.20:11; யாத்.31:17) ஆறு நாட்கள் என்பது ஆறு கால கட்டங்கள் (Day age creationism) என்பதற்கோ, முதல் நாளுக்கும் இரண்டாம் நாளுக்கும் இடையில் மிகப்பெரிய கால இடைவெளி இருந்தது (Gap- Creationism) என்பதற்கோ பைபிள் ஆதாரங்கள் இல்லை என்பதை நாம் அறிய வேண்டும்.

படைப்பின் ஆறு நாட்களில் ஒவ்வொரு நாளிலும் நடைபெற்ற சம்பவங்கள் பின்வருமாறு.

**நாள் 1** வானங்களும் பூமியும் படைக்கப்படுதல்
வெளிச்சம் ஏற்படுத்தப்பட்டு அதினின்று இருள் பிரிக்கப்படுதல்

**நாள் 2** ஆகாயவிரிவு படைக்கப்படுதல்

**நாள் 3** வெட்டாந்தரை படைக்கப்படுதலும் ஜலமானது சமுத்திரமாய் ஒருங்கிணைக்கப்படுதலும்
அனைத்து வகையான தாவரங்கள் படைக்கப்படுதல்

**நாள் 4** சகலவித நட்சத்திர மண்டலங்கள் படைக்கப்படுதல்
பூமியிலே இது முதற்கொண்டு நாட்களையும் காலங்களையும் வேறுபடுத்திக் காண்பிப்பதற்காக சூரியனும் சந்திரனும் படைக்கப்படுதல்

**நாள் 5** தண்ணீரிலும் சமுத்திரங்களிலும் ஜீவிக்கக்கூடிய சகலவித மச்சங்களும் படைக்கப்படுதல்

சகலவித பறவைகளும் படைக்கப்படுதல்

**நாள் 6** பறவைகளையும் மச்சங்களையும் தவிர்த்த சகலவித உயிரினங்களும் படைக்கப்படுதல்

கடைசியாக திரியேக தேவன் தமக்குள்ளேயே தீர்மானித்துக் கொண்டு மனிதனை தனது சாயலின்படியேயும் ரூபத்தின்படியேயும் படைத்தார். (ஆதி.1:26–27) மற்ற எல்லா படைப்பின்மீதும் மனிதனுக்கு அதிகாரம் கொடுத்தார் தேவன். இதோடு படைப்பின் செயல் நிறைவுற்றது.

**நாள் 7** தேவன் ஓய்ந்திருந்தார். இது அவர் களைப்படைந்தார் என்று குறிக்காமல் அவரது படைப்பின் செயல் நிறைவுற்றதை குறிக்கிறது.

## 04. ஆதாமும் ஏவாளும்

சிலர் ஆதாமும் ஏவாளும் இதிகாச கதாபாத்திரங்களே என கூறுகின்றனர். அது முற்றிலும் தவறாகும். ஆதியாகமத்தில் மாத்திரமல்ல, புதிய ஏற்பாட்டிலும் ஆதாமும் ஏவாளும் தேவனால் படைக்கப்பட்ட முதல் மனிதர்கள் என்பதற்கு ஏராளம் சான்றுகள் உண்டு.

லூக்கா, இயேசுவின் முற்பிதாக்களின் வரிசையை பட்டியலிடும்போது முதல் மனுஷனாகிய ஆதாம் வரைக்கும் கொண்டு வருகிறார். (லூக்.3:38) அப். பவுல் முதல் மனுஷனாகிய ஆதாமின் கீழ்படியாமையினாலே பாவம் உலகத்தில் பிரவேசித்தது என கூறுகிறார். (ரோ.5:22; கொரி.15:22) எல்லாவற்றுக்கும் மேலாக கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கூற்றைப் பார்ப்போம். திருமணத்தைக் குறித்த போதனையில் முதல் மனிதனாகிய ஆதாமையும் ஏவாளையும் சுட்டிக்காட்டுகிறார். (மத்.19:3–6) மட்டுமல்ல ஆதாமின் பிள்ளைகளாகிய காயீனையும் ஆபேலையும் பற்றிப் பேசுகிறார். மத்.23:29–36; லூக்.11:50–51) மத் 24:37–39ல் நோவாவையும் ஜலப்பிரளயத்தையும் பற்றி நமக்கு நினைப்பூட்டி அதன் உண்மைத்தன்மையை நிலைநாட்டுகிறார்.

## 05. தேவனுடைய சிருஷ்டிப்பின் செயலைக் குறித்து சரியான அறிவின் அதிமுக்கியத்துவம்.

எப்படி ஒரு கட்டிடத்திற்கு அஸ்திபாரமானது முக்கியமானதோ, அதைப்போலவே துவக்கங்களைக் குறித்த சரியான அறிவு அதிமுக்கியமானதாகும். பைபிளின் ஆதி.1:1 “ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார்” என்கிற

அஸ்திபாரத்திலிருந்து இறை நம்பிக்கை துவங்குகிறது. ஆகவே இவ்வாக்கியமானது தேவனைச் சாராத எந்த கொள்கைக்கும் பைபிள் எதிரானது என உணர்த்துகிறது.

சிருஷ்டிப்பைக் குறித்த ஒருவனின் நிலைப்பாடே அவன் கர்த்தருடைய வார்த்தையாகிய பைபிளை ஏற்றுக் கொண்டு அதைக் கனப்படுத்துகிறானா என்பதை நமக்கு காண்பித்து விடும். கிறிஸ்தவர்களாகிய நாம் தேவனுடைய சிருஷ்டிப்பின் செயலுக்கும் துர்ப்போதனையாகிய பரிணாம கோட்பாட்டிற்கும் இடையேயுள்ள வேறுபாட்டை சரியாக அறிந்திருக்க வேண்டும். இரண்டுமே ஒரே நேரத்தில் உண்மையாகிவிட முடியாது. இரண்டில் ஏதாவது ஒன்றையே தெரிவு செய்ய முடியும்.

ஒருவன் பரிணாம கொள்கையை விசுவாசிக்கிறான் என்றால் அவன் தேவனுடைய சிருஷ்டிப்பின் வல்லமையான செயலை அசட்டை செய்கிறான். அவன், மனிதன் குரங்கிலிருந்து வந்தான் என்று நம்புகிறபடியினால் ஆதாமும் ஏவாளும் அவனுக்கு கற்பனைக் கதையே. ஆதாமும் ஏவாளும் இல்லாவிட்டால் பாவம் என்பதும் இல்லை. பாவம் என்பது இல்லாவிட்டால் இரட்சிப்பும் இல்லை. இரட்சிப்பும் இல்லா விட்டால் இரட்சகரும் இல்லை. பரலோகமும் நரகமும் இல்லை. கடைசியாக தேவனும் இல்லை. பாருங்கள் ஒரு சிறிய தவறு எப்படிப்பட்ட ஆபத்திற்கு நம்மை இழுத்துச் செல்லுகிறது என்பதனை நாம் உணர வேண்டும்.

வாழ்க்கையிலே எல்லா மனுஷரும் விடைகாண விரும்புகிற நான்கு கேள்விகள் உண்டு. அவையாவன,

i. நான் யார் **?**

ii. நான் எங்கிருந்து வந்தேன் **?**

iii. நான் ஏன் இங்கு இருக்கிறேன் **?**

iv. நான் மரித்தபிறகு எங்கு செல்லுவேன் **?**

தேவனைப் புறக்கணித்து விட்டு இந்த கேள்விகளுக்கு பதிலளிக்க முயலுவீர்களானால், உங்கள் வாழ்க்கையே அர்த்தமில்லாமல் போய்விடும். நம்முடைய சிருஷ்டி கர்த்தராகிய திரியேக தேவனை போற்றுவோம், சேவிப்போம், பறைசாற்றுவோம். மாரநாதா.

**– S.** மோசஸ் ராஜ்

# அபிஷேகம்

என்ன அண்ணே! உங்களை பார்க்கவே முடியவில்லை ? வெளியூர் சென்றுவிட்டீர்களா ?

எங்கும் போகவில்லை தம்பி. ஊழியம் கொஞ்சம் கூடுதல். அவ்வளவுதான்! நீ நல்லா இருக்கிறியா ?

ஆமாண்ணே! உங்களிடம் போன சந்திப்பின்போது நான் கேட்ட கேள்வி ஞாபகம் இருக்கிறதா ?

ஞாபகம் இருக்கிறது தம்பி! அபிஷேகம் என்றால் என்ன என்றுதானே கேட்டிருந்தாய். சொல்லுகிறேன்.

அபிஷேகம் என்றால் ''அர்ப்பணித்தல்'' அல்லது ''ஒரு பணியில் நியமித்தல்'' என பொருள்படும். பழைய ஏற்பாட்டில் அபிஷேகம் என்ற சொல் இரண்டு வகை காரியங்களுக்காக பயன்படுத்தப்பட்டது. முதலாவது ஆசரிப்பு கூடாரத்தின் பொருட்களை இறைப்பணிக்காக அர்ப்பணித்தல். இதனை பரிசுத்தப்படுத்துதல் எனவும் கூறுவர். அதாவது இறைபணிக்கு அர்ப்பணிக்கப்பட்ட (அபிஷேகிக்கப்பட்ட) ஒரு போருளை வேறு எந்த பணிக்கும் பயன்படுத்தக்கூடாது. ஆசரிப்பு கூடாரத்தை அபிஷேகம் பண்ணும்படி மோசேக்கு தேவன் கட்டளையிட்டார். ''அபிஷேக தைலத்தை எடுத்து, வ ாசஸ்தலத்தையும் அதிலுள்ள யாவையும் அபிஷேகம் பண்ணி அதையும் அதிலுள்ள சகல பணிமுட்டுகளையும் பரிசுத்தப்படுத்துவாயாக....'' (யாத்.40:9) இப்படி அபிஷேகம் செய்தவற்றை வேறு காரியங்களுக்கு பயன்படுத்தக்கூடாது. இது முதல் வகை .

இரண்டாம் வகை அபிஷேகம் என்ன ?

அதையும் சொல்கிறேன் தம்பி!

இரண்டாம் வகை அபிஷேகம் என்பது ஒருவரை ஒரு பணிக்காக அபிஷேகம் செய்தல். இதனை பட்டாபிஷேகம் எனவும் கூறலாம். இரண்டாம் வகை அபிஷேகம் என்னும் பட்டாபிஷேகம் மனிதர்களுக்கு மட்டுமே கொடுக்கப்படும். மோசே ஆசரிப்பு கூடார பொருட்களை அபிஷேகம் செய்தபின் ஆரோனை ஆசாரியனாக அபிஷேகம் செய்தான். (யாத். 40:13–16). அதாவது ஆரோனை ஆசாரியனாக ''பட்டாபிஷேகம்'' செய்தான். ஆரோனுக்கு ஆசாரிய பட்டம் கொடுத்து பிரதான ஆசாரியராக நியமித்தான். இதுவே பட்டாபிஷேகம். இது இரண்டாம் வகை அபிஷேகம்.

எனக்கு அபிஷேகம் என்றால் இப்போதுதான் கொஞ்சம் புரியுது அண்ணே!

நல்லது. அதுபோலவே ராஜாக்களையும் பழைய ஏற்பாட்டில் அபிஷேகம் செய்தனர். சாமுவேல் தாவீதை அபிஷேகம் செய்தார். (1சாமு.16:13) இவ்வாறு ஆட்சி அல்லது ஆசாரிய தலைவர்களை மட்டும் இஸ்ரேல் நாட்டில் அபிஷேகம் செய்வர்.

அண்ணே! தீர்க்கத்தரிசிகளை அபிஷேகம் செய்யமாட்டார்களா?

பொதுவாக தீர்க்கத்தரிசிகளை இஸ்ரேல் நாட்டில் அபிஷேகம் செய்வதில்லை. ஆனால் ஒரேயொரு முறை மட்டும் அப்படி செய்யப்பட்டது. (1ராஜா.19:16) எலியாவின் இடத்தில் அவருக்குப் பின்பு தலைவர் பொறுப்பில் நியமிக்கப் பட்ட எலிசா அபிஷேகம் செய்யப்பட்டார். மற்றபடி ஒருபோதும் தீர்க்கதரிசிகள் அபிஷேகிக்கப்படுவதில்லை.

பழைய ஏற்பாடு குறித்து கூறினீர்கள். புதிய ஏற்பாட்டில் அபிஷேகம் என்றால் என்ன? அதையும் சொல்லிவிடுங்கள்.

புதிய ஏற்பாட்டில் கிறிஸ்து என்ற சொல் “அபிஷேகம் பண்ணப்பட்டவர்” என பொருள் படும். அதாவது இராஜாவாக ஆள்கிறவர். இயேசு கிறிஸ்து இந்த உலகை ஆளும்படி அபிஷேகம் பண்ணப்பட்டுள்ளார். அது மட்டுமல்ல இயேசுவின் உயிர்த்தெழுதலை விசுவாசித்து அவரை மீட்பராக ஏற்றுக்கொண்ட அனைவரையும் தேவன் அபிஷேகித்துள்ளார். “உங்களோடே கூட எங்களையும் கிறிஸ்துவுக்குள் ஸ்திரப்படுத்தி நம்மை அபிஷேகம் பண்ணினவர் தேவனே” (2கொரி.1:21)

கிறிஸ்து உலகை ஆளும்படி அபிஷேகிக்கப்பட்டுள்ளார். அது போல நாமும் அவருடன் ஆளும்படி அபிஷேகிக்கப்பட்டுள்ளோம். ஆகவே சுருங்கக்கூறினால் அபிஷேகிக்கப்படுதல் என்றால் தலைவனாக “ஆள்வதற்கு நியமித்தல்” என பொருள்படும்.

கிறிஸ்து ஆளப்பிறந்தவர். அதுபோல நாமும் ஆளப்பிறந்தவர்கள்!

ஆச்சரியமாக இருக்கிறதண்ணே. இப்போதுதான் அபிஷேகம் என்பதை சரியாக முழுமையாக புரிந்து கொண்டேன்.

அண்ணே, ஆளப்பிறந்தவர் என்பதை மட்டும் கொஞ்சம் விரிவாக சொல்லுங்க!

தம்பி கொஞ்சம் பொறு .......!

(பொறுமையுடன் தொடர்வோம்)

– எச்.ஆர்.கே

# மிரியாம் என்ற தீர்க்கதரிசி

மிரியாம் என்பவர் பழைய ஏற்பாட்டுச் சரித்திரத்தில் மிக முக்கியத்துவம் பெற்றிருந்த ஒரு பெண்மணியாவார். யாத்.5:20,21–ல் எழுதியுள்ளபடி, ‘‘ஆரோனின் சகோதரியாகிய மிரியாம் என்னும் தீர்க்கதரிசியானவளும்’’ என்ற குறிப்பைக் காண்கிறோம். மிரியாம் பாடற்குழுவிற்குத் தலைமை வகித்தவருமாய்க் காணப்பட்டார். தன் கையிலே தம்புரை எடுத்துக்கொண்டாள். சகல ஸ்திரீகளும் தம்புருக்களோடும், நடனத்தோடும் அவளுக்குப்பின்னே புறப்பட்டுப் போனார்கள் என்று சொல்லப்பட்டுள்ளது. (15:20)

மிரியாம் என்ற பெயர் மரியாள் என்பதற்கு இணையான எபிரேய பெயராகும். மோசே, ஆரோனின் மூத்த சகோதரியாகிய மிரியாம் பற்றிய குறிப்பு வேத புத்தகத்தில் பல இடங்களில் வருகிறது. இந்த மிரியாமே மோசே என்ற குழந்தைக்கு தமக்கை (யாத்.2:7) என அறிமுகப்படுத்தப்படுகிறாள். அவர் தனது இளைய சகோதரனைப்பற்றி எவ்வளவு கரிசனை கொண்டிருந்தார் என்பது, யாத்.2:3,7,8 வசனங்களில் தெளிவாகத் தெரிகிறது. வசனம் 4ல் அவன் நாணற்பெட்டிக்குள் வைக்கப்பட்ட குழந்தைக்கு என்ன நேரிடுமோ என்று கவலையுற்று, தூரத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்தார் எனச் சொல்லப்பட்டுள்ளது. தனது தம்பியை வளர்க்க சொந்தத் தாயாரையே பார்வோனின் குமாரத்தியிடம் ஏற்படுத்திக் கொடுத்த அக்கறை கொண்ட ஒரு சகோதரியாக இங்கு மிரியாம் பரிணமிக்கிறாள். இச்சம்பவத்தின் போது மிரியாம் 12–14 வயதுள்ளவராகவே இருந்திருப்பார். மோசேயும் கூட தான் பெரியவனான போது இக்காரியங்களைக் குறித்து தனது தமக்கையிடம் மிகுந்த நன்றியறிதலுள்ளவராயிருந்திருப்பார். மிரியாமின் புத்திக்கூர்மையான தலைமைத்துவம் இச்செயலில் வெளிப்பட்டிருக்கிறதை காண்கிறோம்.

மீகா. 6:4ல் மிரியாம் என்ற இந்த தீர்க்கதரிசியின் பெயர் குறிக்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம். ‘‘நான் உன்னை எகிப்து தேசத்திலிருந்து வரப்பண்ணி, அடிமைத்தன வீட்டிலிருந்து உன்னை மீட்டுக் கொண்டு, மோசே, ஆரோன், மிரியாம் என்பவர்களை உனக்கு முன்பாக அனுப்பினேன்’’ என்று யூதா இஸ்ரவேல் வம்சங்களைப் பார்த்துக் கூறப்பட்ட வார்த்தைகளைக் காண்கிறோம். இவர்கள் மூவரும் லேவிக் கோத்திரத்தைச் சார்ந்த அம்ராப் யோகோபோத்தின் பிள்ளைகளாவர்.

இந்த மிரியாம் ஒருதடவை எதிர்த்து நிற்கும் ஆவியினால் ஆட்கொள்ளப்பட்டதாகவும் நாம் அறிகிறோம். எண்.12:2ல், ''கர்த்தர் மோசேயைக் கொண்டு மாத்திரம் பேசினாரோ, எங்களைக் கொண்டும் அவர் பேசினதில்லையோ'' என்று மிரியாமும், ஆரோனும் ஒன்றாகச் சேர்ந்து மோசேக்கு எதிர்த்து நின்றார்கள் என்றும் காண்கிறோம். இங்கே மோசேயை முக்கியத் தலைவனாக தெரிந்து கொண்ட கடவுளின் ஞானத்தை மிரியாம் கேள்வி கேட்பதாக உள்ளது. மிரியாம் மூன்றுபேர்களிலும் மூத்த சகோதரியானவர். ஆகவே அவர்கள் (ஆரோனும் கூட) மோசேயைவிட தாங்கள் கர்த்தரிடத்தில் அதிக வாய்ப்பு பெற்றவர்கள் என எண்ணிக் கொண்டதில் சற்று நியாயமிருக்கலாம். ஆயினும் கர்த்தர் மோசே யாவரைக்காட்டிலும் முக்கியமானவர் என்ற உண்மையை அவர்களுக்கு நிலைநிறுத்திக் கூறினார். அவனுக்கு விரோதமாக அவர்கள் பேசியது மிகப்பெரிய தவறு என்றும் கூறினார். அவளுடைய குற்றம் பெரியதாகக் காணப்பட்டபோதிலும் ''என்தேவனே, அவளை குணமாக்கும்'' என்று மோசேயும் கர்த்தரிடத்தில் கெஞ்சுகிறார். ஆரோனும் கூட தான் செய்த தவறை உணர்ந்து மோசேக்கு விரோதமாகப் பேசியதற்கு அவரிடமே மன்னிப்புக் கோருகிறார் (எண்.12:11).

மிரியாமின் பெயர் கடைசியாக 40 வருட வனாந்திரப் பயணத்தின் இறுதியில் சொல்லப்படுகிறது. எகிப்திலிருந்து புறப்பட்ட முதல் தலைமுறையினர் எவரும் (யோசுவாவும், காலேபும் தவிர) வாக்குத்தத்த நாட்டில் பிரவேசிக்கவில்லை. மிரியாமும், ஆரோனும் கூட ஏன் மோசேயும் கூட வாக்குத்தத்த நாட்டைச் சென்றடையவில்லை. அவர்கள் காதேஷ் எனும் ஊருக்கு வந்தபோது மிரியாம் மரணமடைந்து, அங்கே அடக்கம் பண்ணப்பட்டாள் என்றுள்ளது. (எண்.20:1) இதே அதிகாரத்தில் ஆரோன் ஓர் எனும் மலையின் உச்சியில் மரித்ததும் சொல்லப்பட்டுள்ளது.

மிரியாம் காலேபின் மனைவியாயிருக்கலாம் என சில வேத அறிஞர்கள் ஆய்வுகளில் கண்டுள்ளார்கள். மிரியாமின் வாழ்வு மிகுந்த பொறுப்பு நிறைந்த தலைமைத்துவம் மற்றும் சேவையும் கொண்டதாய் அமைந்திருந்தது. கடவுளின் அழைப்பு மிரியாமின் வாழ்விலும் நன்கு உணரப்பட்டது. ஒரு தலைவியாக, ஒரு தீர்க்கதரிசியாக, ஒரு சேவகியாக மிரியாம்தனது அழைப்பைப் பெற்று அதைத் திறம்பட நிறைவேற்றியதை நாம் காண்கிறோம்.

**– ராணி எஸ். மார்டீன்**

## நன்கொடை அனுப்புவோர் கவனத்திற்கு

நன்கொடை மற்றும் காணிக்கை அனுப்புவோரும், வங்கியில் காணிக்கை செலுத்துவோரும் தயவு செய்து தங்கள் பெயர் மற்றும் முழு முகவரியை எமக்கு தெரிவிக்கவும். உரிய ரசீது கொடுக்க அது உதவிகரமாக அமையும். தங்கள் உதவிக்கும் ஒத்துழைப்புக்கும் நன்றி.

**பெயர் :** Newhope Mission (நியூஹோப் மிஷன்)
**எமது வங்கி கணக்கு எண் : 254901000557777**
**வங்கி : இந்தியன் ஓவர்சீஸ் வங்கி** (IOB)
**கிளை : மிடாலக்காடு** (Midalakkadu)
IFSC Code : IOBA 000 2549

நமது மிஷன் பணிக்களங்களை நேரில் பார்வையிட்டு ஜெபிக்க உங்களை அன்புடன் அழைக்கிறோம்.
தொடர்பு எண் : **9443155120 & 9442935233**

**மலர்–2 இதழ்–2 ன் (யோவேல்–யோனா) விடைகளுக்கான வசன பகுதி**

1. **33** முறை,
2. ஆமோஸ். **1:5**,
3. யோவேல். **3:6**,
4. ஆமோஸ். **4:7**,
5. ஒபதியா.**1:4,5,7**,
6. ஆமோஸ். **9:12**,
7. ஆமோஸ். **8:3**,
8. ஆமோஸ். **9:9**,
9. **19** முறை,
10. **48** வசனங்கள்

---

## பணிக்கள சந்திப்பு

நமது மிஷனெரி பணிக்களங்களில் நடைபெறும் பணிகளை நேரடியாக பார்வையிட்டு அங்கு பணிபுரியும் மிஷன் பணியாளர்கள் மற்றும் அவர்கள் குடும்பத்தினரை சந்திக்கவும் விருப்பமுடையவர்களாய் இருக்கிறீர்களா ? அப்படியானால் உங்கள் விருப்பத்திற்கு உறுதுணையாக நாங்கள் இருக்கின்றோம். நமது குழுவினர் வடஇந்திய மிஷனெரி பணிகளை பார்வையிட செல்லும்போது நீங்களும் எங்களுடன் இணைந்து கொள்ளலாம். உங்கள் வருகை வட இந்தியாவில் உள்ள புதிய கிறிஸ்தவ நண்பர்கள் யாவரையும் உற்சாகப்படுத்துவதாக அமையும். பணிக்களங்களை நேரில் சந்திக்க விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

**குறிப்பு:**

ஆயுள்சந்தா ரூ.2000/– செலுத்துபவர்களுக்கு புது நம்பிக்கை வெளியீடுகள் அனைத்தும் இலவசமாக அனுப்பித் தரப்படும்.

"இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ....'' (1 தெச.5:17)

# ஜெப விண்ணப்ப குறிப்புகள்

☞ ஆந்திர மாநிலத்தில் கட்டப்பட்டு வரும் சபை தேவைகளை கர்த்தர் சந்திக்கும்படி ஜெபித்துக்கொள்ளுங்கள்

☞ மருத்துவ அறுவை சிகிட்சை செய்து கொண்ட சகோ. ரமேஷ் அவர்களுக்காகவும் மேலும் அவர் பணி செய்த இடத்தில் வர தடைபட்டுள்ள பணம் தடைகள் நீங்கி கிடைக்கும்படி ஜெபித்துக்கொள்வோம்.

☞ சகோ. தங்கமணி அவர்களுக்கு காலில் ஏற்பட்ட எலும்பு முறிவுக்கு அறுவை சிகிட்சை செய்யப்பட்டது. அவர் விரைவில் குணமடைவதற்கு ஜெபியுங்கள்.

☞ ஜம்மு காஷ்மீர், சத்தீஸ்கர் மற்றும் மத்திய பிரதேசத்தில் சபைகள் கட்டப்படுவதற்கான தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்

---

# வேதாகம வினா – விடை போட்டி – 2018

வேதாகம பகுதி : – **மீகா – மல்கியா**

1. அம்பாயம் என்ற வார்த்தை எந்த வசனத்தில் உள்ளது ?
2. கூலிக்கு உபதேசிக்கிறது யார் ?
3. கொடிதும், வேகமுமான ஜாதியார் யார் ?
4. மச்சியிலிருந்து சாட்சியிடுவது ஏது ?
5. வெட்டுண்டவர்கள் யார் ?
6. பிரதான ஆசாரியன் யார் ?
7. அம்பாரம் என்ற வார்த்தை எந்த வசனத்தில் குறிக்கப்பட்டுள்ளது ?
8 தூதனுக்கு முன்பாக விரோதம் செய்ய நினைத்தது யார் ?
9. விலாசம் எதின் மேல் எழுதப்பட்டிருந்தது ?
10. சபிக்கப்பட்டவன் யார் ?

விடைகளை அனுப்ப வேண்டிய முகவரி
**S. Vasantha Nesam,** 23- Eastaff Street, Nagercoil - 629 001
Cell : 9789183072

விடைகள் வந்துசேர வேண்டிய கடைசி நாள் : **ஜூன் 10, 2018**

ஜனவரி-மார்ச் இதழ் போட்டிக்கான சரியான விடை எழுதியவர்கள்

**1. Mrs. ஸ்டெல்லா அலெக்ஸ், 2. Mrs. பாக்கியம் குமார், 3. Mrs. செல்வி செல்வராஜ், 4. Mrs. பொன்னேசம் ராஜா, 5. Mrs. லின்சி யூஜின், 6. Mrs. பமிலா எட்வின், 7. Mrs. சாந்தி சாலோமோன், 8. Mrs. சந்திரமதி ராஜா, 9. மாஸ்டர். ரினில்.**

# Take use Good Opportunities
# நல்ல வாய்ப்புகளை தெரிந்தெடுங்கள்

**-by Pr. J. David Jerald**

நம்முடைய வாழ்க்கை முழுவதும் நமக்கு நிறை ய வாய்ப்புகள் உள்ளன. நற்காரியங்களை செய்வதற்கு மக்களை கிறிஸ்துவுக்குள் வழி நடத்துவத்ற்கு, ஜெபிப்பதற்கு, வேதத்தை தியானிப்பதற்கு என்று நமக்கு நிறைய வாய்ப்புகளைத் தேவன் நமக்கு தருகிறார். சிலர் அந்த வாய்ப்புகளை கண்டு கொண்டு அதனைப் பயன்படுத்தி உபயோகமான காரியங்களைச் செய்து வாழ்க்கையில் முன்னேறுகிறார்கள்.

## I. நல்ல வாய்ப்புகளை தெரிந்தெடுத்த வேதாகமத்திலுள்ள நபர்கள் (Bible characters who took good opportunities

### 1. மத்தேயு : (Matthew)

**மத். 9:9**

**“இயேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் போகையில், ஆயத்துறையில் உட்கார்ந்திருந்த மத்தேயு என்னும் ஒரு மனுஷனைக் கண்டு எனக்குப் பின் சென்று வா என்றார். அவன் எழுந்து அவருக்குப் பின் சென்றான்”.**

மத்தேயு இயேசு கிறிஸ்துவின் அழைப்பை அந்த வாய்ப்பை தெரிந்தெடுத்துக் கொண்டு தான் செய்த வரி பிரிக்கும் வேலையை விட்டு விட்டு இயேசுவுக்குப் பின் சென்று அவருடைய சீஷராகும் நல்ல பாக்கியத்தை தெரிந்து கொண்டார்.

### 2. பேதுரு : (Peter)

பேதுரு பிரசங்கம் செய்தபோது 3000 பேர் இரட்சிக்கப்பட்டு ஞானஸ்நானம் பெற்றனர். அவர்கள் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு பல்வேறு பாஷைகளை பேசுவதைக் கேட்டு அநேகர் பிரமித்தார்கள். அப்.2:13ல்

**“அப்பொழுது பேதுரு பதினொருவரோடுங் கூட நின்று, அவர்களை நோக்கி, உரத்த சத்தமாய்: யூதர்களே எருசலேமில் வாசம்பண்ணுகிற ஜனங்களே, நீங்களெல்லாரும் அறிந்து கொள்வீர்களாக என் வார்த்தைகளுக்குச் செவி கொடுங்கள்” என்றார்**

பேதுரு பிரசங்கம் செய்த போது 3000 பேர் இரட்சிக்கப்பட்டு அந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொண்டனர். மற்றவர்கள் அதனை உதாசீனப்படுத்தி இரட்சிக்கப்பட்டவர்களை மதுபானத்தால் நிரம்பியிருக்கிறார்கள் என்று பரியாசம் பண்ணினார்கள் என்று அப். 2:13–ல் வாசிக்கிறோம்.

“மற்றவர்களோ இவர்கள் மதுபானத்தினால் நிறைந்திருக்கிறார்களென்று பரியாசம் பண்ணினார்கள்”

இவ்வாறு அவர்கள் தங்களுக்கு கிடைத்த வாய்ப்பை உதாசீனப்படுத்தி இரட்சிப்பை அடையாமல் போனார்கள்.

## 3. பர்ணபாஸ் : (Barnabas)

சவுல் எருசலேமுக்கு வந்து சீஷருடன் சேர்ந்துக்கொள்ளப் பார்த்த போது அவனைச் சீஷனென்று நம்பாமல் எல்லாரும் அவனுக்குப் பயந்திருந்தார்கள். ஆனால் பர்ணபாஸ் தேவன் பவுலுக்கு ஒரு பெரிய திட்டத்தை வைத்திருக்கிறார் என்று அறிந்து அவனுக்கு உதவி செய்ய விரும்புகிறார். தேவ மகிமைக்கு ஏற்ற விதமாக மற்றவர்களுக்கு உதவ நமக்கு வாய்ப்பு கிடைத்தால் நாம் அதனை சரியாக பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அப்.9:26,27

**“சவுல் எருசலேமுக்கு வந்து, சீஷருடனே சேர்ந்து கொள்ளப் பார்த்தான் அவர்கள் அவனைச் சீஷனென்று நம்பாமல் அவனுக்கு பயந்திருந்தார்கள். அப்பொழுது பர்னபா என்பவன் அவனைச் சேர்த்துக் கொண்டு, அப்போஸ்தலரிடத்தில் அழைத்துக் கொண்டுபோய், வழியிலே அவன் கர்த்தரைக் கண்ட விதத்தையும், அவர் அவனுடனே பேசினதையும், தமஸ்குவில் அவன் இயேசுவின் நாமத்தினாலே தைரியமாய் பிரசங்கித்ததையும் அவர்களுக்கு விவரித்துச் சொன்னான்”.**

## 4. இயேசு : (Jesus)

இயேசு கிறிஸ்து தான் வந்த நோக்கம் நிறைவேற எப்பொழுதெல்லாம் வாய்ப்பு கிடைக்கிறதோ அதனை சரியாக பயன்படுத்திக் கொள்கிறார். லூக்.19:5,10

**“இயேசு அந்த இடத்தில் வந்தபோது, அண்ணாந்து பார்த்து, அவனைக் கண்டு: சகேயுவே, நீ சீக்கிரமாய் இறங்கி வா, இன்றைக்கு நான் உன் வீட்டிலே தங்க வேண்டும் என்றார்.**

**இழந்து போனதைத் தேடவும் இரட்சிக்கவுமே மனுஷகுமாரன் வந்திருக்கிறார் என்றார்”.**

மேற்கூறிய வசனமே இயேசு கிறிஸ்துவின் நோக்கம்ஆகும். அதற்கான வாய்ப்பை அவர் பயன்படுத்தினதால் அன்று சகேயு இரட்சிப்பைப் பெற முடிந்தது.

மற்றவர்களை இரட்சிப்பதற்கு நமக்கு வாய்ப்பு கிடைக்கும் போது அதனை நாம் தவறாமல் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். இல்லையென்றால் தேவன் நம்மிடம் கணக்கு கேட்பார். அந்த நாளில் நாம் வெட்கப்பட்டுப் போகாதபடிக்கு எச்சரிக்கையாய் இருக்க வேண்டும்.

## 5. ஆபிரகாம் : (Abraham)

தேவன் ஆபிரகாமுக்கு கானானுக்கு போகும்படி கூறியபோது அவன் உடனே அந்த வாய்ப்பை பயன்படுத்தினதால் அவனுடைய சந்ததியார் கானானை சுதந்தரித்தார்கள்.

ஆதி. 12:1

“கர்த்தர் ஆபிரகாமை நோக்கி: நீ உன் தேசத்தையும், உன் இனத்தையும், உன் தகப்பனுடைய வீட்டையும் விட்டுப் புறப்பட்டு நான் உனக்குக் காண்பிக்கும் தேசத்துக்குப் போ”.

ஆபிரகாம் அந்த நல்ல வாய்ப்பை பயன்படுத்திக் கொண்டான்

## II. நல்ல வாய்ப்பை இழந்த நபர்கள்

## (Examples of people who missed good opportunities)

### 1. ஆதாம் : (Adam)

ஆதாம் சாத்தானால் ஏற்பட்ட சோதனையை மேற் கொண்டிருந்தால் உலக மக்கள் அனைவரும் நீதியிலே தரித்திருப்பார்கள். பாவம் செய்ய ஒரு தருணம் வரும் போது நாம் அந்த தவறான வாய்ப்பை பயன்படுத்தாமல் அந்த சோதனையை மேற்கொண்டால் மட்டுமே நம்முடைய இரட்சிப்பு தேவனுக்கு மகிமையை கொண்டுவரும். இல்லையென்றால் நம்முடைய ஆசீர்வாதம் நம்மை விட்டு எடுபட்டுப் போகும். நாம் தேவ மகிமை அற்றவர்களாவோம்.

### 2. நோவா காலத்து மக்கள் : (Noah’s Generation)

நோவா வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர்கள் பேழைக்குள் பிரவேசிக்கும் வாய்ப்பை தவற விட்டார்கள். எனவே அவர்கள் இரட்சிப்பை பெற முடியாமல் ஜலப்பிரவாகத்திற்குள் சிக்கி மரித்துப் போனார்கள். நித்திய ஆக்கினையை அடைந்தார்கள்.

### 3. மோசேயின் காலத்து மக்கள் : (Moses Generation)

மோசேயில் காலத்தில் வாழ்ந்தவர்கள் இராட்சதர்கள் மேல் ஏற்பட்ட பயத்தினால் காதேஸ் பர்னேயாவில் தேவனுடைய வல்லமையை நம்பாமல் அந்த வாய்ப்பை பயன்படுத்தாததினால் 40 வருஷம் வனாந்திரத்தில் அலைந்து திரிந்தனர். அந்த சந்ததியார் மரிக்கும் மட்டும் அவர்கள் கானானுக்குள் பிரவேசிக்கவில்லை அவர்களுடைய சந்ததியாரே கானானை சுதந்தரித்தார்கள்.

நாமும் தேவனுடைய வல்லமையை நம்பாமல் இடையில் வரும் தடங்கல்களையே நோக்கும் போது நமக்கு வரும் ஆசீர்வாதம் தடைப்படும்.

### 4. சாலோமோன் : (Solomon)

சாலோமோன் விக்கிரகங்களை அழிக்க வாய்ப்பிருந்தும் விக்கிரகங்களை வணங்கும் ஸ்திரீகளை மணமுடித்ததினால் விக்கிரகங்களை ஒழிக்க வேண்டும் என்ற கட்டளையை மதிக்காமல், அதனை அகற்றிப் போடாமல் தேவ ஆசீர்வாதத்தை இழந்து போனான்.

நம்மை விட்டு விலக்க வேண்டும் என்று சொல்லும் காரியங்களான விக்கிரக ஆராதனை, குறி கேட்டல், மந்திரம் செய்தல், குடிப்பது போன்ற பாவங்களை நம்மை விட்டு விலக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் இருந்தால் நம்முடைய ஆசீர்வாதம் தடைபடும். நம்முடைய ஆசீர்வாத

தடைக்கு நம்மிடம் தடையாக உள்ள பாவங்கள் என்ன என்று பார்த்து அதனை நீக்க வேண்டும்.

## 5. இஸ்ரவேலர் : (Israel)

இஸ்ரவேலர் தங்களுக்கு கிடைத்த பல வாய்ப்புகளை தவறவிட்டதால் அநேக ஆசீர்வாதங்களை இழந்தார்கள். இதில் அதிக பட்சமாக கிறிஸ்துவை இரட்சகராக, மேசியாவாக ஏற்றுக்கொள்ளவில்லை. அதன் விளைவு அவர்கள் சிதறடிக்கப்பட்டார்கள். அநேக போர்களை சந்திக்க வேண்டியதாயிற்று. இன்னும் அதே நிலை தொடர்கிறது.

நாமும் கிறிஸ்துவை மறுதலித்து அந்நிய தேவர்களை நாடினால் நாமும் அழிந்து ஆசீர்வாதங்களையும் இழந்துபோவோம்.

## III. நாம் வாய்ப்புகளை தவறவிட காரணம் என்ன ?

**(Why do people Miss opportunities)**

1. தோல்வியின் பயம் நம்மை சோர்வடைய (discourage) பண்ணி சரியான வாய்ப்பை தெரிந்தெடுக்காமல் புதிய காரியங்களை செய்ய தடை செய்கிறது.
2. **"இதோ திறந்த வாசலை உனக்கு முன்பாக வைத்திருக்கிறேன்"**. என்று கூறும் தேவ சத்தத்தை கேளாதபடி தங்கள் செவியை அடைத்துக்கொள்வதன் மூலம் அவர்கள் நல்ல வாய்ப்பை தவற விடுகின்றனர்.
3. வேத வாசிப்பு, ஜெபம் இல்லாதவர்களுடைய வாழ்க்கையில் சரியான வாய்ப்பை தெரிந்தெடுப்பதில் குழப்பம் ஏற்பட்டு தவறானவற்றை தெரிந்தெடுத்து ஆசீர்வாதத்தை இழக்கின்றனர்.

## IV. எந்த வாய்ப்பை நாம் தெரிந்தெடுக்க வேண்டும் ?

**(What opportunities should we take?)**

1. இன்று நாம் இரட்சிக்கப்பட வேண்டும் II கொரி. 6:2 (பின்பாகம்) "...... இதோ இப்பொழுதே அநுக்கிரக காலம், இப்பொழுதே இரட்சணிய நாள்".
2. சுவிசேஷத்தை மற்றவர்களுக்கு கூறவேண்டும்.

நாம் சுவிசேஷத்தை மற்றவர்களுக்கு கூற நமக்கு கிடைக்கும் ஒவ்வொரு வாய்ப்பையும் நாம் சரியாக பயன்படுத்த வேண்டும். அதே போல உலகப்பிரகாரமான நம்முடைய வாழ்க்கையில் ஒவ்வொரு காரியத்திலேயும் நல்ல வாய்ப்புகளைத் தெரிந்தெடுக்க நாம் ஒவ்வொரு காரியத்தையும் வேதம் வாசித்து ஜெபிக்கும் போது தேவன் நமக்கான சரியான வாய்ப்பைக் காட்டிக் கொடுப்பார். அவருடைய ஆசீர்வாதத்திற்கு தடையாய் இருக்கும் பாவங்களை நம்மை விட்டு அகற்றி தெய்வ ஆசீர்வாதத்திற்காக காத்திருந்து அதனை சுதந்தரித்துக் கொள்ள வேண்டும்.



# மருத்துவ குறிப்பு
# எலுமிச்சை பழம்

கோடை காலத்தில் அதிகம் கிடைக்கும் பழம் எலுமிச்சை. திராட்சை, ஆரஞ்சு, சாத்துக்குடி, நெல்லிக்காய் போன்றவை உயிர்ச்சத்து விட்டமின் –சி அதிகம் கொண்ட சிட்ரஸ் பழங்களாகும். எலுமிச்சை பழம் உடலில் நோய் எதிர்ப்பு சக்தியை கூட்டும். கோடை காலத்தில் உடலிலிருந்து அதிகம் நீர் வெளியேறுவதால் நோய் எதிர்ப்பு சக்தி குறைய வாய்ப்புண்டு. இந்த நீர் இழப்பை ஈடுகட்டவும், நோய் எதிர்ப்பு சக்தியை கூட்டவும், உடல் சூட்டை தணிக்கவும் எலுமிச்சை பழச்சாறில் தேன், வென்னீர்கலந்து பருகுவது மிகுந்த பலனளிக்கும். தொடர்ந்து 60 நாட்கள் சாப்பிட்டால் உடல் எடை குறையும். எலுமிச்சை சாறில் பனை வெல்லம் சேர்த்து சாப்பிட்டால் நெஞ்சு எரிச்சல் நீங்கும். **–எச்.ஆர்.கே.**

## ஜெபக்குழ முன்னேற்ற பணியாளர்கள் தேவை

மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் மிஷனரிகளுக்கு **புதுநம்பிக்கை** மிஷன் பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறது. மிஷனரிகளுக்கு உதவி செய்யும் மிஷனரி பணியில் ஆர்வமுள்ள தன்னார்வ முன்னேற்ற பணியாளர்கள் தேவை. தாங்கள் வாழ்ந்து வரும் பகுதியிலேயே இப்பணிகளை செய்யலாம். மிஷனரி பணியில் ஆர்வமுள்ள கிறிஸ்தவ சகோதரர் / சகோதரிகள் இப்பணிகளை ஜெபத்துடன் செய்யலாம்.
(நேரில் வர விரும்புவோர் முன் நேரம் குறித்து வரவும்)

எமது அலுவலக முகவரி:
**புது நம்பிக்கை மிஷன்**
75/33, ஐசக் தெரு, நாகர்கோவில் - 629 001.
தொடர்பு எண் : 9442935233

## ஜெப மற்றும் குடும்ப ஆலோசனை

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே !

உங்கள் ஜெபத்தேவைகள் மற்றும் குடும்பம், வேதாகமம் குறித்த ஆலோசனைகளுக்கு எங்களை தொடர்பு கொள்ளவும். ஜெபித்து ஆலோசனை கூறி உதவ ஆயத்தமாயிருக்கிறோம்.

தொடர்பு எண் : **9442935233**

ஜெப உதவிக்கு சகோதரி A. **சுதா ஏசாயா - 9486083188**

*யூ–டியூபில் எமது தேவ செய்திகளை கேட்டு ஆசீர்வாதம் பெறுங்கள்*

**Youtube:- NEW HOPE MISSION**

# பாடல் புத்தகம் – வெளியீடு

சபை ஆராதனை, வீட்டு ஜெபக்கூட்டம், தனி ஜெபத்தில் தேவனை பாடி துதிக்க பக்தி பரவசம், இனிமையான பாடல்களின் தொகுப்பு. 500–க்கும் மேற்பட்ட பழைய, புதிய பாடல்கள் மலையாள, ஆங்கில பாடல்களும் உண்டு. பாடல் புத்தகத்தின் விலை ரூ. 70/–



**எமது இதர வெளியீடுகள்**

யூத பண்பாடும் வசன விளக்கமும் – ரூ. 30/–
சபை உடைதலை தடுக்கும் வழிகள் – ரூ. 120/–
சபை நிதி பெருகும் வழிகள் – ரூ. 70/–

குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்
தொடர்பு எண்: 9442935233




## புது நம்பிக்கை வெளியீடுகள்

வேதாகமத்தின் ஆழமான சத்தியங்களை புரிந்து கொள்ள "யூத பண்பாடும் வசன விளக்கமும்" என்னும் நூல் வெளியிடப்பட்டுள்ளது. வேத வசனங்களில் வரலாற்று மற்றும் கலாச்சார பின்னணியில் வசனங்களை புரிந்து கொள்ளவும் ஆவிக்குரிய முறையில் விசுவாசிகள் வளரவும் பயனுள்ள விளக்கங்கள் இப்புத்தகத்தில் உள்ளன. அனைத்து கிறிஸ்தவர்களும் படிக்க வேண்டிய புத்தகம். வேதாகம பள்ளி மாணவர்கள் மற்றும் ஆசிரியர்களுக்கு பரிசளிக்க தகுந்த சிறந்த புத்தகம்.

குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்
தொடர்பு எண்: 9442935233

## நமது பத்திரிகை நடத்திய வேதாகம போட்டியில் கலந்து கொண்டவர்களுக்கு அன்புக்குரிய பொது செயலாளர் Rev.Dr. இன்பராஜ் ஜாண்சன் அவர்கள் புஸ்தகங்கள் பரிசு வழங்குதல்





ஆந்திரா மாநிலத்தில் கட்டப்பட்டு வரும் சபையின்
தற்போதைய தோற்றம்




Editor : S. Moses Raj, (Mobile : 7502071054),
Published by : New Hope Mission,
75/33, Isaac St. Nagercoil - 629 001.
Contact : 9442935233
e-mail: newhopebharat@gmail.com
website : www.newhopebharat.org
Youtube:- NEW HOPE MISSION
Printed at : Latha Press, 9791659601

For Private Circulation Only